7th March 1958]

*Agricultural subordinates*

* 239 *Q.*—SRI S. LAZAR : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) whether the Indian Council of Agricultural Research have made any recommendation regarding the pay of Agricultural subordinates with B.Sc. (Agricultural) qualifications; and

(*b*) if so, the action taken thereon?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) No, Sir.

(*b*) Does not arise.

* 240 *Q.*—SRI V. SUBBIAH : Will the Hon. the Minister for Home be pleased to state whether there is any proposal to enhance the pay of Agricultural Demonstrators?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : Yes, Sir.

SRI K. ANBAZHAGAN : தலைவர் அவர்களே, விவசாய டிமான்ஸ்ட்ரேட்டர்கள் பி.எஸ்ஸி. பட்டம் பெற்றவர்களுக்கு சம்பள உயர்வு அளிக்கப் போவதாக அமைச்சர் அவர்கள் அறிவித்தார்கள். துவக்கச் சம்பளம் 100 ரூபாயிலிருந்து 135-க்கு மாற்றப்பட்ட போதிலும், 8 ஆண்டுகள் வரை ஆண்டு தோறும் 5 ரூபாய் சம்பள உயர்வு பெற்று பிறகு 10 ரூபாய் உயர்வு வாங்கிக் கொண்டிருந்தவர்களுக்கு இப்போது 18 ஆண்டுகள் வரை 5 ரூபாய் உயர்வு கொடுத்து, அதற்குப் பின்னால் 10 ரூபாய் உயர்வு கொடுப்பதைக்குறித்து குறை தெரிவித்திருக்கிறார்களே, அது கவனிக்கப்படுமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அதைப் பற்றி யெல்லாம் வரவு செலவுத் திட்டத்தின் மீது முடிவு செய்யும்போது யோசித்து முடிவு செய்திருக்கிறோம்.

*Teachers in Panchayat Schools*

* 241 *Q.*—SRI A. VEDARATHNAM : Will the Hon. the Minister for Finance be pleased to state whether the teachers employed in panchayat schools are paid the special additional pay and dearness allowances sanctioned in Government Order No. 1985, Education, dated 31st October 1956?

THE HON. SRI C. SUBRAMANIAM : Yes, Sir.

*Cooum River*

* 242 *Q.*—SRI V. K. KOTHANDARAMAN : Will the Hon. the Minister for Public Works be pleased to state whether the Cooum River is used for navigation purposes?

THE HON. SRI P. KAKKAN : Yes, Sir, to a limited extent from the Madras Penitentiary to Cooum lock, north of the University buildings.

[7th March 1958

**Sri V. K. KOTHANDARAMAN** : சென்னையிலிருந்து ஆந்திரத் துறை முகம் வரையிலே இந்தக் கூவம் ஆற்றில் கப்பல் போக்கு வரத்திற்காக பரிசீலனை செய்ய ஏற்கனவே பணம் ஒதுக்கப்பட்டிருக்கிறது. அந்தப் பரிசீலனை முடிந்ததா ? அப்படியானால் அதன் விவரம் கூற முடியுமா ?

**The Hon. Sri P. KAKKAN** : கூவம் நதியில் கப்பல் போக முடியாது (சிரிப்பு). சிறிய படகுதான் போக முடியுமே தவிர, பெரிய படகு போக முடியாது என்பதை கனம் அங்கத்தினருக்குத் தெரிவித்துக் கொள்கிறேன்.

**Sri T. P. ELUMALAI** : இந்தக் கூவம் ஏரியை (சிரிப்பு) மன்னிக்க வேண்டும், ஆற்றை ஆழமாகத் தோண்டி படகு போவதற்குத் தக்கவாறு திருத்தி அமைக்க வேண்டுமென்று சர்க்காரிலே நடவடிக்கை எடுப்பதாகத் தெரிய வந்தது. ஆகவே அதைப் பள்ளமாக ஆக்கி படகு போவதற்குச் சரியாக அமைத்துக் கொடுக்க முடியுமா என்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

**The Hon. Sri P. KAKKAN** : கூவம் நதியை மிகவும் ஆழப்படுத்தி சமுத்திரத்திலிருந்து அலைகள் மூலம் முகத்துவாரத்திற்கு அப்புறப்படுத்தி கொண்டு வருகிற மண்ணையும் போக்குவதற்கு ஏற்பாடு செய்தால் படகு போவதற்கு முடியும் என்று எஞ்சினியர்கள் அபிப்பிராயம் கூறியிருக்கிறார்கள். இந்தத் திட்டத்தை எடுத்துக் கொண்டால், கார்ப்பொரேஷன் வாரித் தண்ணீரைத் தடுக்கவேண்டும். இப்போதுள்ள நிதி நிலைமையில் தற் சமயம் இந்தத் திட்டத்தை எடுத்துக்கொள்ள முடியாது என்று தெரிவித்துக்கொள்கிறேன்.

**Mr. SPEAKER** : Questions are over.

[*Note.*—**An asterisk (*) at the commencement of a speech indicates revision by the Member.**]

## II.—CALLING ATTENTION TO A MATTER OF URGENT PUBLIC IMPORTANCE UNDER RULE 40 OF THE MADRAS ASSEMBLY RULES *RE* THE CLOSURE OF DALMIA CEMENT (BHARAT), LIMITED. DALMIAPURAM,

**Mr. SPEAKER** : கனம் லாஸர் அவர்கள் 40-வது விதிப் பிரகாரம் ஒரு பிரேரேபணையைக் கொடுத்திருக்கிறார்கள். சுருக்கமாகப் பேசவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

**Sri A. VEDARATHNAM** : On point of order, Sir, சபையில் கேள்வி நேரம் மிகவும் முக்கியமான நேரம். அதற்காக ஒரு மணி நேர அவகாசம் அளிக்கப்பட்டிருந்தும்கூட, அந்த நேரத்தைப் பூராவாகப் பயன்படுத்திக்கொள்ள முடியவில்லை. அங்கத்தினர்கள் உப கேள்விகள் கேட்பதற்கு இன்னும் அதிக அவகாசம் கொடுத்து, கேள்விக்காக ஒதுக்கப் பட்டிருக்கிற ஒரு மணி நேரத்தையும் பயன்படுத்திக்கொள்ள அனுமதித்தால் அனுகூலமாக இருக்காதா என்பதைத் தலைவர்கள் முடிவு செய்ய வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

**Mr. SPEAKER** : எனக்கு ஒன்றும் இதில் ஆட்சேபணை இல்லை. கேள்விக்காக அதிக நேரம் ஒதுக்கினால், அதிக அங்கத்தினர்கள் பொது விவாதத்தின்போது பேசமுடியாமல் போய்விடும். கனம் அங்கத்தினர் சம்பந்தப்பட்ட வரையில் இரண்டு நாட்களுக்கு முன்னர் பேசிவிட்டார்கள். அவர்களுக்கு கவலையில்லை (சிரிப்பு). ஆனால் இன்னும் பேசுவதற்குப் பல அங்கத்தினர்கள் இருக்கிறார்கள். அதை நினைவில் வைத்துக்கொண்டு தான் கேள்விக்காக நேரத்தை ஒதுக்கினேன்.

**Sri S. LAZAR** : கனம் தலைவர் அவர்களே, திருச்சி ஜில்லாவிலே, டால்மியாபுரம் பகுதியிலே, டால்மியா செமன்ட் கம்பெனி இருப்பதோடு கூட, "போர்ஸிலேன்" சாமான்கள் போன்று சில பொருள்களும் உற்பத்தி செய்யப்படுகின்றன. அங்கே வேலை செய்யக்கூடியவர்கள் சுமார் 4,400 பேர் இருக்கும். ஒரு சில மாதங்களுக்கு முன்பு நேர்மையான